

நமக்கு ஏற்படும் எண்ணங்கள் உணர்ச்சிகள் யாவையும் அவை போக்கில்தான் செயல்படுகின்றன.

இதுதான் மனதின் முதற்பகுதி – இது தான் பிரதானப் பகுதி.

மு தற்பகுதியைப் பொறுத்தளவில் நல்லவை – கெட்டவை கிடையாது.

நமது அறிவுப் பகுதி என்பது மனதின் இரண்டாவது பகுதி.

இது செயலோடு தொடர்புடைய பகுதி.

செயல்களைப் பொறுத்த வரையிலும் சரியானவை – தவறானவை உண்டு.

செயல்களைப் பொறுத்த வரையிலும் சரியானதை தேர்ந்தெடுக்கும் கடமை நமது அறிவுக்கு உண்டு.

அதே நேரம் முதற் பகுதியை மாற்றியமைக்கும் பொறுப்பு எதுவும் இரண்டாம் பகுதிக்குக் கிடையாது.

முதற் பகுதியை இரண்டாவது பகுதி நிர்வாகம் செய்வதைக் கைவிடுவதன் மூலம் முதற்பகுதி எந்த இடையூறும் இல்லாமல் சுதந்திரமாக இயங்குகிறது.

விடுதலை என்பது இறைவனைச் சார்ந்தது.
ஞானம் என்பது மனிதனைச் சார்ந்தது.

– ஸ்ரீ பகவத்

## ஸ்ரீ பகவத் குடில்கள்



அன்பிற்கினிய ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்களுக்கு வணக்கம்.

நமது ஸ்ரீ பகவத் பவன் ஆசிரமம், சேலம் பெரிய கவுண்டாபுரத்தில் இயற்கை எழில்மிகு ஜருகுமலையின் அடிவாரத்தில் அமைந்துள்ளதை அனைவரும் அறிவோம்.

இங்கு ஒவ்வொரு மாதமும் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஞான முகாம் சிறப்பாக நடைபெற்று வருகிறது. இதில் பலரும் கலந்துகொண்டு ஞானத் தெளிவு பெற்றுச் செல்கின்றனர்.

முகாம்களுக்குக் குடும்பத்துடன் வருபவர்கள் சேர்ந்து தங்குவதற்கு போதிய வசதியில்லை.

ஆதலால் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இங்கு குடும்பத்துடன் வந்து தங்கி செல்வதற்கு ஏற்ற வகையில் எல்லா வசதிகளுடன் கூடிய 8 பெரிய (11'x16') அறைகளும் 8 சிறிய (8'x8') அறைகளும் தனித்தனி குளியலறைகளுடன் (4'x6') அமைக்கப்பட்டு கட்டிட வேலைகள் நடைபெற்று வருகின்றன.

இதில் 8 பெரிய அறைகளுக்கான ஸ்ரீ பகவத் காட்டேஜ் உறுப்பினர் சேர்க்கை நிறைவடைந்துவிட்டது.

சிறிய அறைகளுக்கான உறுப்பினர் நன்கொடை ரூபாய் 3 லட்சம் என நிர்ணயம் செய்து இருக்கிறோம். அந்த வகையில் இதுவரை இரண்டு உறுப்பினர்கள் சேர்ந்துள்ளார்கள். இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டும் சேர்க்கப்படவுள்ளனர்.

ஸ்ரீபகவத் காட்டேஜ் உறுப்பினர்கள், வருடத்தில் எத்தனை நாட்கள் வேண்டுமானாலும் இதில் தங்கி தங்களுக்குச் சொந்தமாக பயன்படுத்திக் கொள்ளலாம். இவர்களது உடமைகளையும் இவர்களது அறையிலுள்ள Locker-ல் பாதுகாப்பாக வைத்துச் செல்லலாம்.

குறிப்பிட்ட காலத்திற்குப் பிறகு ஸ்ரீபகவத் மிஷனின் அனுமதியோடு இவர்கள் தங்களது Membership – ஐ மற்றவர்களுக்கு மாற்றலாம்.

இவர்கள் இங்கு தங்காத நாட்களில் மட்டுமே மற்றவர்கள் ஞான முகாம் நடைபெறும் நாட்களில் மட்டும் தங்க அனுமதிக்கப்படுவார்கள். லாக்கர்களைப் பயன்படுத்தும் உரிமை அவர்களுக்குக் கிடையாது.

இன்னும் ஆறு உறுப்பினர்கள் மட்டுமே சேர்க்கப்பட உள்ளதால், ஆர்வம் உள்ளவர்கள் உடனடியாக தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

இது சம்பந்தமான சிறப்புத் தகவல்களுக்கு நேரடியாக போனில் தொடர்பு கொள்ள வேண்டுகிறோம்.

அன்புடன்
**ஸ்ரீ பகவத் மிஷன்,** சேலம்-3. 99942 05880, 97891 65555

## உள்ளே



கூடுதல் தகவல்களைப் பெற விரும்புகிறீர்களா? (அ) பாதையை நண்பர்களுக்கு அனுப்ப விரும்புகிறீர்களா?




31, Ramalingasamy Street, Ammapet,
Salem - 636 003. Tamilnadu India
www.sribagavathmission.org
www.sribagavath.org
E-mail : sribagavathmission@gmail.com
V.A.P. SHARAVANAN - 99942 05880
Dr. N. KAILASAM - 94432 90559
K.S. JEEVAMANI - 97891 65555

This book Designed by
SRI ESPARI GRAPHICS, Salem-3.
Cell : 90926 46260, 98651 34075

# கடவுளும் மனிதனும்



- ஸ்ரீ பகவத்

கடவுளைப் பற்றிய கதைகளை எல்லாம் நாம் இங்கு பார்க்கப் போவதில்லை.

நாம் ஏற்கனவே "அகம் பிரம்மாஸ்மி" என்ற நமது முந்தைய கட்டுரையில் நம் மனதின் இரண்டு விதமான செயல்பாடுகளைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம்.

அதனுடைய தொடர்ச்சியாகவே இந்தக் கட்டுரையும் அமைகிறது.

நம் மனதின் முதலாவது பகுதி உணர்வுப் பகுதி. இரண்டாவது பகுதி அறிவுப் பகுதி.

முந்தைய கட்டுரையில் காட்டாறு ஒன்றைப் பற்றிக் குறிப்பிட்டிருந்தோம்.

காட்டாறானது கட்டுக்கடங்காத வேகத்தில் ஆவேசமாக ஓடுகிறது. அப்படி ஓடும் ஆற்றில் கூட அந்த ஆற்றின் சில பகுதிகளில் ஏதோ சில காரணங்களினால் எதிர்த்திசையை நோக்கிய நீரோட்டங்களும் அமைந்திருக்கும்.

அத்தகைய நிலையில் அந்தக் காட்டாற்றின் சில பகுதிகள் மட்டும் சமன்பட்ட நிலையில் அமைந்து அதனுள் நாம் இறங்கி பயன்படுத்தவும் முடியும்.

இப்படி, நம் மனதின் இரண்டு பகுதிகளும் அமைந்துள்ளன.

நம் மனதில் எத்தனையோ விதமான உணர்ச்சிகள் ஏற்படுகின்றன.

நாம் விருப்பப்படும் உணர்ச்சிகளை நம்மால் உருவாக்கிக் கொண்டு வர முடியாது.

அதுபோல் நமக்கு ஏற்பட்ட உணர்ச்சிகளை நாம் விரும்பியபடி வைத்துப் பாதுகாக்கவும் முடியாது.

இந்த உணர்ச்சிகள் யாவையும் அவை போக்கில்தாம் செயல்படுகின்றன.

இதுதான் நமது மனதின் முதல் பகுதி. இதுதான் பிரதானமான பகுதி.

இதுதான் உணர்வுப் பகுதி. இதுதான் இயற்கைப் பகுதி. இதுதான் இருப்புத் தன்மையுடன் கூடிய உண்மைப் பகுதி.

இதுதான் Existing Reality.

இதுதான் பிரக்ஞை வடிவில் இருக்கிறது. இதுதான் பிரம்மமாக இருக்கிறது. இதுதான் ஆன்மாவாக இருக்கிறது.

இதுதான் கடவுளாக இருக்கிறது.

இதுதான் கற்பிதம் கலக்காத மெய்ப்பொருளாக இருக்கிறது.

இதுதான் நம் மனதின் முதற்பகுதி.

இதுதான் நம் மனதின் Existing part.

அடுத்ததாக வருவது நம் மனதின் இரண்டாவது பகுதி. இது நம்முடைய அறிவுப்பகுதியாக உள்ளது.

இது உண்மையான இருப்புத்தன்மை உடையதன்று. இல்லாத ஒன்றை இருப்பதாகக் காட்டும் ஒருவித கற்பிதத்தன்மையே இது.

நிலைக் கண்ணாடியின் முன்னால் நின்று நாம் தலைவாரிக் கொள்கிறோம். நம்மைப் போன்ற ஓர் உருவம் கண்ணாடிக்குள்ளிருந்தும் தலைவாரிக் கொள்கிறது.

கண்ணாடிக்கு வெளியே உள்ளது மட்டுமே நிஜமான அம்சமாகும். கண்ணாடிக்குள்ளே தெரிவது நிஜமான அம்சம் அன்று. அது வெறும் நிழல் அம்சமே.

இதுதான் நம் மனதின் இரண்டாவது பகுதி. இதுதான் அறிவுப் பகுதி. இதுதான் Intellectual Part. இது ஒரு நிழல் பகுதி.

இது ஒரு கற்பிதப் பகுதி.

இது ஓர் Imaginary Part.

முதற்பகுதி Existing Part.

இரண்டாவது பகுதி Imaginary part.

நடந்து முடிந்த நிகழ்வுகளின் நினைவுகளால் _ Memory யால் உருவான ஒரு கற்பனைப்பகுதிதான் இது.

நடந்து முடிந்தவை அனைத்தும் செய்திகளாக நம் மனதினுள் சேமித்து வைக்கப்பட்டுள்ளன.

அந்த சேமிப்புக் கிடங்கிலிருந்து உருவானதுதான் இந்தக்கற்பிதப் பகுதி.

இந்தக் கற்பிதப் பகுதிக்கு, அறிவு மற்றும் பகுத்தறிவு என்ற பெயரைக் கொடுத்து

நாம் நமது உலகியல் கடமைகள் அனைத்தையும் நிறைவேற்றுகிறோம்.

இந்த இரண்டாவது பகுதியின் உதவி இல்லாமல் நமது எந்தச் செயல்களையும் வெற்றிகரமாகச் செய்து முடிக்க முடியாது.

நமது அறிவின் துணை கொண்டுதான் நாம் நமது பணிகளைத் திட்டமிட முடியும். அப்படி திட்டமிட்ட செயல்களையும் நிறைவேற்ற முடியும்.

இந்த இரண்டாவது பகுதியானது நமது அனைத்துச் செயல்களுக்கும் மிகுந்த பயனுடையதாக இருந்தபோதிலும்

இது அதனளவில் ஒரு கற்பிதப் பகுதியே.

_ ஒரு நிழற்பகுதியே.

நாம் நம்முடைய முதற்பகுதி தான் உண்மைத் தன்மையுடைய - இருப்புத் தன்மையுடையப் பகுதி என்று பார்த்தோம்.

அந்த முதற்பகுதியிடம் நமது உலகியல் கடமைகளையும், பொறுப்புகளையும் ஒப்படைக்க முடியுமா?

அதனிடம் எந்தக் கடமைகளையும் ஒப்படைக்க முடியாது. எந்தப் பொறுப்புகளையும் ஒப்படைக்க முடியாது.

முதலாவது பகுதி என்பது மெய்ப்பொருளாகவே இருந்தாலும்,

நிஜத் தன்மையுடனேயே இருந்தாலும்

-அது அதனளவில் கள்ளங்கபடமற்றது. குழந்தைத் தன்மையுடனேயே அது இருக்கிறது.

எதனையும் அதனால் திட்டமிட முடியாது. இதனை எப்படி செய்யவேண்டும் என்று அதற்குத் தெரியாது.

மூன்று வயதுள்ள நம் வீட்டுக் குழந்தையிடம் நம்மால் என்ன பொறுப்புகளை - வேலைகளை ஒப்படைக்க முடியும்?

அதன் போக்கில் விளையாடவும், சிரிக்கவும் மட்டுமே அதற்குத் தெரியும்.

எந்த வேலையாயினும் சரி, அதனைத் திட்டமிட்டுச் செயல்படுத்தும் பொறுப்புகளை அறிவுள்ள பெரியவர்கள்தாம் எடுத்துக்கொள்ள வேண்டும்.

அந்த அறிவுள்ள பெரியவர்தாம் நம் மனதின் இரண்டாவது பகுதி. அதுதான் அறிவுப் பகுதி. அதுதான் கற்பிதப்பகுதி.

உலகியல் கடமைகள் மற்றும் பொறுப்புகளைப் பொறுத்தவரையிலும்

இரண்டாவது பகுதியான அறிவுப் பகுதிக்கு உதவியாக வேண்டுமானால்

இந்த முதலாவது பகுதி செயல் பட்டுக் கொள்ளலாம்.

அது எப்படி?

இரவு நேரம். வெளிச்சம் எதுவும் இல்லை. புதர்கள் நிறைந்த ஒரு பகுதியினுள் நாம் நடந்து செல்ல வேண்டியுள்ளது.

இப்போது அந்த சூழ்நிலையை எதிர்கொண்ட நமக்கு பயம் ஏற்படுகிறது.

இந்த பய உணர்வு உண்மையானதா அல்லது கற்பனையானதா?

இது உண்மையானது தான். உணர்வுபூர்வமானது தான்.

ஆனால் அதற்கான காரணம் வேண்டுமானால் கற்பிதம் கலந்திருக்கலாம்.

"புதராகவும், இருட்டாகவும் இருக்கிறதே. இங்கு பாம்புகள் மற்றும் விஷ ஜந்துகள் எவையாவது இருக்குமோ?

- என்ற கற்பிதமான எண்ணம்தான் அந்த பய உணர்வு ஏற்படுவதற்குக் காரணமாக அமைந்திருக்கலாம்.

ஆனால் அந்த பய உணர்வு உண்மையானது. இருப்புத்தன்மை உடையது.

அத்தகைய பய உணர்வு ஏற்பட்டதன் காரணமாக நாம் நமக்கு உதவியாக டார்ச் ஒன்றை எடுத்துச் செல்கிறோம். பாதையில் கவனமாக நடந்து செல்கிறோம்.

நமக்கு அத்தகைய பய உணர்வு ஏற்படாத பட்சத்தில் நாம் என்ன செய்வோம்?

டார்ச் எதையுமே எடுத்துச் செல்லாமல் நமது போக்கில் நடந்து சென்றிடுவோம். விளைவாக பாம்பைக் கூட மிதித்துச் சென்றிட நேரிடலாம்.

புறச் செயல்களைத் திட்டமிட்டு நிர்வாகம் செய்யும் தகுதி எதுவும் முதலாவது பகுதிக்கு இல்லாமலிருந்தாலுங்கூட

இரண்டாவது பகுதியின் செயல்பாட்டுக்குத் தேவையான உணர்ச்சிகளை ஏற்படுத்திக் கொடுத்து

இந்த முதற்பகுதி இரண்டாவது பகுதிக்கு உதவுகிறது.

வெளிப்புறச் செயல்களுக்குத்

தேவையில்லாத உணர்ச்சிகள் கூட சில சமயங்களில் இந்த முதலாவது பகுதியில் வெளிப்படலாம்.

தேவையான உணர்ச்சிகளை எடுத்து புறச் செயல்களுக்குப் பயன்படுத்திக் கொண்டோம். தேவையற்ற உணர்ச்சிகளை என்ன செய்வது?

தேவையற்ற உணர்வுகளை நிர்வாகம் செய்து அவற்றை அப்புறப்படுத்த வேண்டாமா?

தேவையான உணர்ச்சிகளையெல்லாம்

நமக்கு வேண்டிய தூண்டுதல்களாக எடுத்து பயன்படுத்திக் கொள்ளலாம்.

ஆனால் தேவையற்ற உணர்ச்சிகள் எவற்றையும் அப்புறப்படுத்தத் தேவையில்லை.

ஏன் அப்படி?

இடி – மின்னல் உதாரணத்தை நாம் ஏற்கெனவே பல சந்தர்ப்பங்களில் பார்த்துள்ளோம்.

நாம் எவரும் மின்னலைக்கண்டு பயப்படுவதில்லை. ஆனால் இடியென்றால் பயந்து விடுவோம்.

இடி இடிக்கும் போது, அது நமது தலையில் விழுந்து விடுமோ என்ற பயம் நமக்கு ஏற்பட்டு விடும்.

மின்னல் ஏற்பட்டு மறைந்த சில வினாடிகளுக்குப் பிறகே இடியோசை நமக்கு ஏற்படுகிறது.

மின்னல் மறைந்த பிறகு இடி என்று எதுவுமே கிடையாது.

இடியோசையைக் கேட்டு நாம் பயப்படுவோமேயானால்

அது இல்லாத ஒன்றை இருப்பதாக எண்ணி பயப்படுவதேயாகும்.

இல்லாத ஒன்றை அப்புறப்படுத்த வேண்டுமா?

நமக்கு ஏற்படும் அனைத்து உணர்ச்சிகளும் இந்த இடியைப் போன்றவையேயாகும்.

உணர்ச்சிகள் அனைத்தும் மின்னலைப் போல் தோன்றி மறைந்து விடுகின்றன. அவை மறைந்த பிறகே நம்மால் அடையாளங்கண்டு புரிந்து கொள்ளப்படுகின்றன.

முடிந்துபோன ஒன்றை மாற்றியமைக்கும் தேவை எதுவும் நமக்குக் கிடையாது.

ஆகவே நமது மனதின் முதற்பகுதியைப் பொருத்த அளவில்

நமது உணர்ச்சிகளில் நல்லவை – கெட்டவை கிடையாது.

உயர்ந்தவை – தாழ்ந்தவை கிடையாது.

சரியானவை – தவறானவை கிடையாது.

ஆகவே நமது முதலாவது பகுதியைச் சீரமைக்கும் வேலை எதுவுமே இந்த இரண்டாவது பகுதிக்குக் கிடையாது.

முதலாவது பகுதி என்பது செயற் பகுதி அன்று. அதனை இயற்கை எனவே எடுத்துக் கொள்ளவேண்டும்.

–இறைவன் எனவே எடுத்துக் கொள்ள வேண்டும்.

இரண்டாவது பகுதிதான் அறிவுப் பகுதி. அறிவு பகுதி மட்டுமே செயல்களோடு தொடர்புடையதாகும்.

செயல்களைப் பொருத்த வரையிலும், சரியானவை – தவறானவை உண்டு.

– உயர்ந்தவை தாழ்ந்தவை உண்டு.

– நல்லவை கெட்டவை உண்டு.

– தேவையானவை, தேவையற்றவை உண்டு.

– செய்ய வேண்டியவை, செய்ய வேண்டாதவை உண்டு.

ஆகவே செயல்களைப் பொருத்த வரையிலும் சரியானதைத் தேர்ந்தெடுக்கும் கடமை நமது அறிவுக்கு உண்டு.

ஆகவே நாம் சரியானதைச் சிந்தித்து, சரியானதை முடிவு செய்து, சரியானதை நிறைவேற்ற வேண்டும்.

செயல்களைப் பொருத்த வரையிலும் நமது இரண்டாவது பகுதி தான் தலைமை தாங்கி செயல் படவேண்டும்.

மனிதனாகச் செயல்படும் இந்த இரண்டாம் பகுதிக்கு இந்த முதல் பகுதி கூட உதவி செய்யலாம். இரண்டாம் பகுதியின் தலைமையின் கீழ் முதற்பகுதி கூட செயல்பட்டுக் கொள்ளலாம்.

அதே சமயம் முதற்பகுதியான உணர்வுப் பகுதியைப் பொருத்த அளவில் இரண்டாம் பகுதிக்கு எந்த வேலையும் கிடையாது.

அப்படி எந்த வேலையும் அதற்குக் கிடையாது என்பதைப் புரிந்து கொள்வதைத்தான்

ஞானம் என்ற பெயரில் நாம் குறிப்பிடுகிறோம்.

ஞானம் மற்றும் அஞ்ஞானம் இரண்டுமே இந்த இரண்டாம் பகுதியையே சார்ந்தவையாகும்.

இரண்டாம் பகுதியானது முதலாவது பகுதியை நிர்வாகம் செய்வதைக் கை விடுவதன் மூலம்.

முதலாவது பகுதியின் சுதந்திரமான இயக்கம்

எந்தவித இடையூறும் இல்லாமல் இயங்குகின்றது.

அதுதான் விடுதலை – முக்தி– Liberation.

விடுதலை இறைவனைச் சார்ந்தது.

ஞானம் மனிதனைச் சார்ந்தது.






V.A.P. **சரவணன்.** சேலம்.
செல் : 99942 05880

# கேள்வி ? பதில்...

## மனதின் இருவகை செயல்பாடுகள்

**கேள்வி :** நான் மனதைப் பற்றிய ஆராய்ச்சியில் ஈடுபடும் M.Sc. Psychology படிக்கும் மாணவன். மனதின் இயக்கத்தைப் பற்றிய பல நூல்களைப் படித்து இருக்கின்றேன். தற்போதுதான் ஸ்ரீபகவத் அய்யாவின் நூல்களை படித்துக்கொண்டிருக்கிறேன். Youtube -ல் அவரது வீடியோக்களைப் பார்த்து இருக்கின்றேன். மனதின் செயல்பாட்டை இரண்டாகப் பிரித்து கூறுகிறார். ஒரு பகுதியில் நமக்கு வேலை இருப்பதாகவும் மற்றொரு பகுதியில் வேலை இல்லை என்பதையும் குறிப்பிடுகிறார். இது சற்றே எனக்கு குழப்பமாக இருக்கிறது. இருப்பது ஒரு மனம் தானே? இரண்டு மனம் இருக்கிறதா? எனக்குப் புரியவில்லை. சற்று விளக்கமாகக் கூறவும்.

**பதில் :** நம்மிடம் இருப்பது ஒரே மனம் தான். நாம் மனதின் இயக்கத்தை புரிந்துகொள்வதற்காக இரண்டாகப் பிரித்து புரிந்து கொள்கின்றோம். மனதின் ஒரு பகுதியில் நமக்கு எந்த வேலையும் இல்லை. அது தாமாக செயல்படும் பகுதியாகும். இந்த முதல் பகுதியில்தான் எல்லா உணர்வுகளும் எண்ணங்களும் வெளிப்படுகின்றன. நாம் சந்திக்கும் சூழ்நிலைக்கு ஏற்ப நம்மிடம் எண்ணமாகவும் உணர்வாகவும் வெளிப்பட்டுக் கொண்டே இருக்கும். பிறகு நம்முடைய நான் என்ற இருப்புத் தன்மை இதை உணர்கிறது. அப்படி நமது நான் தன்மை உணர்வதைதான் நாம் “எண்ணுபவன்” “உணர்பவன்” என்று கூறுகிறோம். நாம் விழித்திருக்கும் நேரம் முழுவதும் நமக்கு தாமாக எண்ணங்கள், உணர்வுகள் தோன்றி மறைந்து கொண்டேதான் இருக்கும். அதன் பிறகு அதை உணரும் எண்ணுபவன், உணர்பவன் என்ற நான் தன்மையும்கூட தாமாகத் தோன்றி மறையும் இயக்கத்தின் பகுதியை சேர்ந்ததுதான். இங்கு நமக்கு எந்த வேலையும் இல்லை என்பதைப் புரிந்து கொள்ள வேண்டும். இது முழுவதும் Emotional பகுதியைச் சேர்ந்தது ஆகும். நமது மனதின் இரண்டாம் பகுதி அறிவுப் பகுதி. இந்த இரண்டாம் பகுதியை Intellect part என்று கூறுகிறோம். இரண்டாம் பகுதியான அறிவு பகுதிக்கு முதல் பகுதியில் எந்த வேலையும் கிடையாது

முதல் பகுதியானது உடல் உறுப்புகளின் அக இயக்கத்தைப் போன்றது. தானியங்கி மண்டலமான ரத்த ஓட்டம், வெப்ப ஓட்டம், காற்று ஓட்டம், நுரையீரல், இருதயம் போன்றவற்றின் செயல்பாடுகள் போன்றது. இவை தாமாக நடைபெறும் இயக்கம்.

இப்படி தாமாக நடைபெறுகின்ற மன இயக்கத்தை நம்மால் உணரத்தான் முடியுமே தவிர வேறு எதுவுமே செய்ய முடியாது.

மனதின் இரண்டாம் பகுதியில் நமது அறிவு செயல்படுவதற்கு வாய்ப்பு உள்ளது.

முதல் பகுதியில் நாம் உணர்ந்த எண்ணங்கள் உணர்வுகளுக்கு நமது அறிவுப் பகுதியால் ஒன்றும் செய்ய முடியாது. முதல் பகுதியில் ஏற்பட்ட எண்ண உணர்வுகளுக்கு இந்த இரண்டாம் பகுதியில் அறிவின் துணை கொண்டு சிந்தித்து செயல்பட முடியும். புறச் செயல் ரீதியாக என்ன செய்யலாம், எப்படி செய்யலாம், அதற்குத் தேவையான ஆலோசனைகளைப் பெறுவது என்பன போன்ற அனைத்திற்குமே இந்த இரண்டாம் பகுதியான அறிவைப் பயன்படுத்திச் செயல்படுத்திக் கொள்ளலாம். முதல் பகுதியில் ஏற்பட்ட எண்ண உணர்வுகளை தூண்டுகோலாக எடுத்துக்கொண்டு தேவையான புறச் செயலை செய்வதற்கு இந்த இரண்டாம் பகுதியான அறிவைப் பயன்படுத்திக் கொள்ள முடியும்.

எளிமையான ஓர் உதாரணத்தின் மூலம் மனதின் முதல் பகுதி, இரண்டாம் பகுதியில் நாம் எப்படி செயல்படுகிறோம் என்பதைப் புரிந்து கொள்வோம்.

நமது மிக நெருங்கிய நண்பர் ஒருவர் உடல்நலத்தில் தீவிர அக்கறை கொண்டவர். உடல் நலத்திற்காக எல்லாப் பயிற்சி முயற்சிகளையும் மேற்கொண்டு உடலை ஆரோக்கியமாக வைத்திருக்கும் நபர். இளமையாக தோற்றம் அளிப்பவர்.

எதிர்பாராத விதமாக அவருக்கு உடல் நலக் குறைவு காரணமாக மருத்துவமனையில் அனுமதிக்கப் பட்டு தீவிர சிகிச்சைக்குப் பிறகு இல்லம் திரும்பி இருக்கிறார்.

நாம் அவரை நலம் விசாரிக்க சென்று வருகிறோம். இதுதான் நிகழ்வு.

அவரின் உடல் நிலையைப் பற்றி கேள்விப்பட்ட பிறகு ‘இவ்வளவு ஆரோக்கியமும் பயிற்சியும் மேற்கொண்ட இவருக்கு எப்படி, இப்படி உடல்நலக்குறைவு ஏற்பட்டது’ என்று எண்ணுவோம். இப்படி அவரின் உடல்நிலையைப் பற்றி எண்ணும் அதே நேரம் நாம் உடல் ஆரோக்கியத்திற்கான எந்தப்

பயிற்சியும் செய்யாமல் இருப்பது தாமாக நினைவுக்கு வரும். நாம் ஆரோக்கியமான உணவு பழக்கங்களை கடை பிடிக்காமல் இருப்பது, இரவு அதிக நேரம் கண் விழித்து தூங்காமல் இருப்பது போன்ற நம்முடைய நிலைப்பாட்டை நமது மனம் தாமாக எடுத்து காட்டிக் கொண்டே இருக்கும்.

நம் நிலை என்ன என்பதை நமக்குள் பல விதமான எண்ணங்கள் உணர்வுகள் நம்மை அறியாமல் தாமாக வெளிப்படுத்த ஆரம்பித்துவிடும். இதுதான் மனதின் முதல் நிலையின் செயல்பாடு. நம்மிடம் தோன்றும் இந்த எண்ணம், உணர்வுகளுக்கு நாம் என்ன செய்யப் போகிறோம்?

நமக்கு ஏற்படும் எண்ணங்கள், உணர்வுகள், எண்ணுபவன், உணர்பவன் ஆகிய அனைத்துமே நம் மனதின் முதல் நிலை ஆகும். இப்படி மனதின் முதல் பகுதியில் ஏற்படும் எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கும் நமது இரண்டாம் பகுதியான அறிவால் ஒன்றுமே செய்ய முடியாது. இது முழுவதும் மனதின் முதல் பகுதியைச் சேர்ந்தது.

முதல் நிலையில் தோன்றும் எண்ண உணர்வுகளுக்கு நாம் ஒன்றும் செய்ய முடியாது என்பதை புரிந்துகொண்டோம்.

இப்பொழுது மனதின் இரண்டாம் பகுதியான அறிவுக்கு என்ன வாய்ப்பு இருக்கிறது என்பதைப் பார்ப்போம்.

முதல் நிலையில் நாம் உணர்ந்து கொண்ட எண்ணங்களுக்கும் உணர்வுகளுக்கும் இரண்டாம் பகுதியான அறிவின் துணைகொண்டு இனி நம் ஆரோக்கியத்திற்கு என்ன வேலைகளை செய்ய முடியும் என்பதை அறிவுபூர்வமாக சிந்திக்கத் தொடங்குவோம். உடல் ஆரோக்கியத்திற்கான உடற்பயிற்சி, நல்ல உணவு முறை, இரவு 10 மணிக்கு மேல் கண் விழிக்காமல் இருப்பது போன்றவற்றை சரி செய்து தூக்கத்தை முறைப்படுத்திக் கொள்ள தேவையான செயல் திட்டங்களை திட்டமிடுவோம். நாம் திட்டமிட்டபடி செயல்படுவதற்கு இந்த இரண்டாம் நிலையான அறிவின் செயல்பாடு மட்டுமே உதவும்.

மனதில் முதல் பகுதியில் நமக்கு எப்போதுமே எந்த வேலையும் கிடையாது. வருவதை உணர்ந்து கொள்வது ஒன்று மட்டும்தான் வேலை. அதைத் தவிர வேறு எந்த வேலையும் இல்லை. அந்த உணர்ந்து கொள்வதும் கூட தாமாகதான் நடைபெறுகிறது.

இரண்டாவது பகுதியில்தான் நமக்கு வேலையே இருக்கிறது. நாம் இதுவரை சேகரித்து வைத்துள்ள அனுபவங்கள், நினைவு பகுதிகள் அனைத்தையும் அறிவைக் கொண்டு சிந்தித்து சரியான செயலை செய்து கொள்வதற்கான ஒரு வாய்ப்பு, இந்த இரண்டாவது பகுதியில் இருக்கிறது. இது முழுவதும் நாமாக முனைந்து செயல்படும் பகுதியைச் சேர்ந்தது. இங்கு தானாக நடைபெறும் இயக்கம் என்பது கொஞ்சமும் கிடையாது.

நம்முடைய ஒவ்வொரு இயக்கத்திலும் தாமாகச் செயல்படும் பகுதியும் இருக்கிறது, நாமாக செயல்படும் அறிவுப் பகுதியும் இருக்கிறது. நமக்கு புறத் திட்டமிடல், செயல் ஏதேனும் தேவையெனில் மட்டுமே இந்த இரண்டாவது பகுதியான அறிவைப் பயன்படுத்திக்கொள்ளலாம். செயல் எதுவும் தேவை இல்லாத பட்சத்தில் முதல் பகுதியில் தாமாக தோன்றியது தாமாகவே மறைந்துவிடும்.

எண்ணம், உணர்வு – முதல் பகுதி

அறிவு – இரண்டாம் பகுதி

முதல் பகுதி தாமாகத் தோன்றி மறையும் இயற்கையின் இயக்கம். இரண்டாம் பகுதிக்கு முதல் பகுதியில் எந்த வேலையும் இல்லை.

இரண்டாம் பகுதியான அறிவுக்குப் புறத்தைப் பற்றி சிந்திப்பதும் திட்டமிடுதலும் செயல்படுத்துவதும் மட்டுமே வேலை.

## பகவத் பாதை சந்தா விபரம்

நமது பகவத் பாதை மாத இதழானது ஒவ்வொரு மாதமும் 10-ம் தேதிக்குள் தபாலில் அனுப்பி வைக்கப்படுகிறது. இது அதிகபட்சமாக 15 நாட்களுக்குள் அனைவரது இல்லங்களையும் வந்து சேரும் என்று எதிர்பார்க்கிறோம். எனவே ஒவ்வொரு மாதமும் 25ம் தேதிக்குள் "பகவத் பாதை" தங்களுக்கு வராதவர்கள் போனில் தொடர்பு கொண்டோ அல்லது "Pathai Missing" என்று Type செய்து சந்தா எண்ணுடன் தங்களது முழு முகவரியையும் கீழ்க்கண்ட எண்ணுக்கு SMS அனுப்பியோ தகவல் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம்.

புதிதாக சந்தா செலுத்த விரும்புபவர்கள் இதுவரை சந்தா செலுத்தாதவர்கள், அல்லது புதுப்பிக்காதவர்கள் கீழ்க்கண்ட ஏதேனும் ஒரு வகையில் சந்தா செலுத்துமாறு அன்புடன் கேட்டுக்கொள்கிறோம்.

ஓர் ஆண்டு சந்தா - ரூ. 100/-
ஐந்தாண்டு சந்தா - ரூ. 500/-
ஆயுள் சந்தா - ரூ. 1000/-

சந்தாத் தொகையை "Sri Bagavath Mission" என்ற பெயரில் M.O. அல்லது சேலத்தில் செல்லத் தக்க D.D. (or) Cheque மூலம் அனுப்பலாம்.

வங்கிக் கணக்கில் நேரடியாக செலுத்துபவர்கள் HDFC Bank - Sri Bagavath Mission A/c. No. 15907620000075, NEFT IFSC : HDFC 0001590 என்ற கணக்கில் செலுத்தலாம். Bank A/c-ல் நேரடியாக செலுத்தியவர்கள் உங்கள் முகவரியை 7904118421 என்ற எண்ணிற்கு SMS மூலம் தகவல் தெரிவிக்க வேண்டுகிறோம்.

K.S. ஜீவமணி
செல் : 97891 65555



# ஆசிரியர் பகுதி

ஞானியர் அனைவருக்கும் இந்த சக பயணியின் வணக்கம்.

ஞானமும் முக்தியும் ஆன்மிகத்தின் உயர்ந்த நிலை – முடிவான நிலை.

ஆன்மிகத் தேடலில் இருப்பவர்களில் இதை அடைந்தவர்கள் வெகு சிலரே. அப்படி அடைந்தவர்களே கூட மற்றவர்களுக்கு இதை எளிதில் வழங்க முடியவில்லை.

காரணம் அவர்கள் அடைந்த நிலையே அவர்களுக்கு எப்படி ஏற்பட்டது என்பதை அவர்களால் சரியாகக் கணக்கிட முடியவில்லை.

இதில் விதிவிலக்காக இருப்பவர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மட்டுமே. ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள், தான் அடைந்த ஞானத்தையும் முக்தியையும் தேடுதல் உள்ள அனைவரும் எளிதாக அடையும் வண்ணம் வழங்கி வருகிறார்கள்.

காரணம் தனக்கு ஏற்பட்டது எப்படி என்பதை மிகச் சரியாக புரிந்து கொண்டு அதனை அறிவியல் ரீதியாக மற்றவர்களுக்கு விளக்குவதால் இதை கேட்பவர்கள் அனைவராலும் புரிந்துகொள்ள முடிகிறது.

உண்மையில் ஸ்ரீ பகவத் அய்யாவின் வருகைக்கு முன்பு வரை ஞானம் என்பதை தீவிர பயிற்சி – முயற்சிக்கு பின்பே எங்கோ லட்சத்தில் ஒருவருக்கு ஏற்படும் என்றே அனைவரும் கருதி வந்தனர்.

இன்னும் தெளிவாகக் கூற வேண்டுமென்றால், ஞானம் என்றால் என்னவென்றே தெரியாமல் தேடியது தான் அதனை அடைய முடியாமல் போனதற்கு காரணம்.

எது ஞானம் என்று தெரியாமல் தேடினால் எப்படிப் பெற முடியும்?

இதுவரை ஞானத்தைப் பற்றி கூறவந்த ஞானிகள் கூட விடுதலையின் விளைவைத்தான் கூறினார்களே தவிர, அதாவது விடுதலை என்றால் எப்படி இருக்கும் என்று விடுதலையின் அனுபவத்தைத் தான் கூறினார்களே தவிர ஞானத்தைப் பற்றி அவர்கள் விளக்க வில்லை.

இவர்கள் வழியில் முயற்சி செய்தவர்களும் அந்த அனுபவத்தை அடைய முயற்சி செய்தார்களே தவிர, ஞானத்திற்கு முயற்சி செய்யவில்லை.

உண்மையில் விடுதலையை அடைய முயற்சி செய்வதே விடுதலைக்குத் தடையாக அமைந்து விடுகிறது.

காரணம் விடுதலை என்பது அடைய வேண்டிய ஒன்று அல்ல. நமது மன இயக்கமே இயற்கையிலேயே விடுதலையோடு தான் இயங்கிக் கொண்டிருக்கிறது.

இதற்கு தடையாக இருப்பது நமது அக – முயற்சியே. நமது அக முயற்சியைக் கைவிடுவதற்கான புரிதல்தான் ஞானம் – அதாவது அகத் சரணாகதியை கொடுக்கும் புரிதலே ஞானம்.

இதனை மிகச் சரியான கோணத்தில் அறிவியல் ரீதியாக – புரிதலாக வழங்கியவர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள் மட்டுமே.

மற்ற ஞானிகள் சொல்லத் தவறியதை மிகத் தெளிவாக உரைத்தவர் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களே.

நாம் மற்ற ஞானிகளை குறைத்தும் இவரை உயர்த்தியும் சொல்லுவதாக தவறாக எண்ண வேண்டாம்.

இந்த உண்மையைச் சொல்லவில்லை என்றால் இவர் வழங்கும் புரிதலையும் பத்தோடு பதினொன்றாகக் கருதி நழுவ விட்டு விடுவோம்.

இதுவரை எவரும் இவ்வளவு எளிதாக வழங்கவில்லை என்பது எவராலும் மறுக்க முடியாத உண்மை.

இவரை நேரில் சந்திக்காமலேயே இவர் எழுதிய நூல்களைப் படித்தும் யூடியூப் வீடியோ உரைகளைக் கேட்டும் ஞானம் பெற்றவர்கள் பலர். இதுவே இந்த உண்மைக்கு சான்று.

எல்லோராலும் புரிந்து கொள்ளும் வண்ணம் மிக எளிமையாக ஞானத்தை வழங்குவதைப் போல் இவரும் மிக எளிமையானவர். இவரது எளிமையே இவரது உயர்வு.

ஆன்மிக உலகத்துக்கு மட்டுமல்ல மனித குலத்துக்கே இயற்கை வழங்கிய மாபெரும் கொடைதான் ஸ்ரீ பகவத் ஐயா அவர்கள்.

இவர் வாழும் காலத்தில் வாழும் நாம் அனைவரும் பாக்கியவான்கள். அதிலும் இவரை அடையாளம் கண்டு கொண்டவர்கள் அதிர்ஷ்டசாலிகள்.

இவரை அடையாளம் கண்டு கொண்ட நாம், தேடுதல் உள்ள அனைவருக்கும் ஐயாவை அறிமுகப்படுத்துவதோடு ஞானத்தையும் அனைவருக்கும் பகிர்வோம்.

மிக விரைவில் மீண்டும் நேரடி ஞான முகாம் தொடங்க உள்ளோம்.

அனைவரும் வாருங்கள். சந்திப்போம்.

# அனைவருக்கும் ஓர் அன்பான வேண்டுகோள்



ஸ்ரீபகவத்மிஷன் மீதும் பகவத்அய்யா மீதும் தனிப்பட்ட ஈடுபாடு கொண்ட நமது குடும்ப உறுப்பினர்கள் அனைவருக்கும் வணக்கம்.

சென்னையில் தற்காலிகமான பகவத் பவன் ஒன்றை அமைப்பதற்கு ஏற்கெனவே முயற்சி எடுத்து வந்தோம்.

தற்போது அய்யா அவர்களின் ஆலோசனைப்படி அதனை, தலைநகரான சென்னையில் நிரந்தரமாகவே அமைத்திட முடிவு செய்திருந்தோம்.

வருடத்தில் பாதி நாட்கள் அய்யா சென்னையிலும் மீதி நாட்கள் சேலத்திலுமாகத் தங்கியிருப்பார்கள்.

நாம் ஏற்கெனவே ஆலோசித்தபடி, விற்பனைக்குத் தயாராக உள்ள இரண்டு கட்டிமுடிக்கப்பட்ட பிளாட்களை வாங்குவது என்று தீர்மானித்த நிலையில், பழைய பிளாட் ஒன்று மட்டும் பாதி விலையில் தயாராக இருந்தது.

அனைவரிடமும் உதவி கேட்க அவகாசம் இல்லாத நிலையில் நமது மிஷன் Founder களாக இருக்கும் முதல் நிலை உறுப்பினர்களிடம் மட்டும் வட்டியில்லா கடன் பெற்று அய்யா சென்னையில் தனது மகன் குடும்பத்துடன் தங்கும் வகையில் இரண்டு படுக்கைஅறைகள் மட்டுமே கொண்ட அந்த பிளாட்டை வாங்கிவிட்டோம்.

அடுத்த பிளாட்டு ஒன்றை மிஷன் குடும்ப உறுப்பினர்களுடன் அய்யா தங்கும் வகையிலும், வெளியூரிலிருந்து வரும் நமது குடும்ப உறுப்பினர்கள் எப்போது வேண்டுமானாலும் குடும்பத்துடன் தங்கிச் செல்லும் வகையிலும் சற்றுப் பெரிதாக அமைப்பது என்றும் தீர்மானித்து அதற்கான ஆயத்தங்களில் உள்ளோம்.

ஸ்ரீபகவத் மிஷனைப் பொறுத்தவரையில் நாம் இரண்டு வகையான செயல்பாடுகளோடு பயணித்து வருகிறோம்.

1. ஐயா வழங்கும் ஞானத்தை உலகம் முழுவதும் எடுத்துச் செல்வது.

2. சென்னையிலும் ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவது மற்றும் ஸ்ரீ பகவத் மிஷனது-அய்யாவை பராமரிப்பது உட்பட அனைத்து அன்றாட நிர்வாகச் செலவுகளையும் எதிர்கொள்வது.

தற்போது புரவலர்களாக இணைந்து மாதம்தோறும் நிதி வழங்குபவர்களின் உதவியால் இதனை ஓரளவுக்கு எதிர்கொண்டு வருகிறோம். ஆனால் நாம் எதிர்கொள்ளும் செலவுகளுக்கு இது மிகவும் பற்றாக்குறையாகவே உள்ளது.

நமது அனைத்துச் செலவுகளையும் முழுமையாக எதிர்கொள்ளவும், சென்னை பகவத் பவன் அமைக்கவும், இதுவரை பெற்ற வட்டியில்லாக் கடனை திரும்பச் செலுத்தவும் ஸ்ரீபகவத் மிஷன் குடும்ப உறுப்பினர்கள் ஆகிய நம் அனைவரின் பங்களிப்பும் மிகவும் அவசியம்.

ஐயா மீது ஈடுபாடு கொண்ட நாம் அனைவரும் எளிதான ஒரு சிறிய பங்களிப்பை மட்டும் வழங்கும் பட்சத்தில் இந்த இரண்டாவது அம்சப் பிரச்சினையும் எளிமையாகிவிடும்.

இதனால் நமது முழு கவனத்தையும் 1வது எண் முயற்சியை நோக்கி மட்டுமே வைத்துக்கொண்டால் போதும்.

சிறுதுளி பெருவெள்ளம் என்ற வகையில் நாம் அனைவரும் மாதம்தோறும் ரூபாய் 500/- வழங்கும் பட்சத்தில் நமது முழு முயற்சியும் வெற்றி பெறும்.

எனவே ஈடுபாடுகொண்ட உறுப்பினர்கள் ஒவ்வொருவரும் மாதந்தோறும் இதனை அதிகபட்சம் இரண்டு வருடங்களுக்கு மட்டுமாவது வழங்கி தங்களது பங்களிப்பை உறுதி செய்திடுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.

அன்புடன்,

**ஸ்ரீ பகவத் மிஷன், சேலம்.**

(பி.கு. இதற்கான படிவம் ஒன்று தயாராக உள்ளது. இதைத் தங்கள் வங்கியில் கொடுத்தால் அவர்களே மாதம் தவறாமல் அனுப்பிவிடுவார்கள். ரூ.500க்கு அதிகம் வழங்க விரும்புவோர் தங்கள் குழந்தைகள் பெயரிலும் வழங்கலாம்.)

அனைவருக்கும் நல்வாழ்த்துகளுடன்

**ஸ்ரீ பகவத்,**

**Dr.N. கைலாசம், K.S. ஜீவமணி, V.A.P. சரவணன்**

# மேலும் ஒரு சிறப்பு வேண்டுகோள்.

நமது தலைநகரமான சென்னையில் நமக்கான ஸ்ரீபகவத் பவனை உருவாக்குவதற்கு 10 முதல் 15 சென்ட் வரை காலி நிலம் தேவைப்படுகிறது. இது சென்னையில் எந்தப் பகுதியில் இருந்தாலும் சரி. சென்னையின் மையப் பகுதியாக இருக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. Outer பகுதியாகவும் இருக்கலாம். வாய்ப்புள்ளவர்கள் இதனை வழங்கும் பட்சத்தில் **இது உலக நன்மைக்காக செய்யும் பேருதவியாக இருக்கும்.**

சென்னையில் நமக்கான பகவத் பவனை உருவாக்குவது உலகத்தில் தேடுதல் உள்ள எவர் வேண்டுமானாலும் வந்து செல்வதற்கு ஏற்ற இடமாக அமையும். ஞானத்தை அனைவருக்கும் கொண்டு செல்ல வேண்டும் என்ற நோக்கில் நமக்காக பணியாற்றும் ஸ்ரீபகவத் ஐயாவின் விருப்பமும் இதுவே. எனவே வாய்ப்புள்ளவர்கள் வழங்க வேண்டுகிறோம்.

அன்புடன்,

**ஜீவமணி & சரவணன்**




அனைவருக்கும் வணக்கம்.

**ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் மிக முக்கியமான நூல் "கவலைகள் அனைத்திற்கும் தீர்வு"** எனும் நூல்.

இந்நூல் மனிதகுலத்தின் எல்லா துக்கங்களையும் துயரங்களையும் எளிதில் கடந்து செல்லும் வல்லமையைக் கொடுத்து ஞானத்தெளிவை வழங்கும் நூல்.

இந்நூல் 258பக்கங்களில் மிகவும் தரமான முறையில் வடிவமைக்கப்பட்டுள்ளது.

இதுவரை இந்நூல் ரூபாய் **250/-** க்கு வழங்கி வந்தோம். தற்போது இந்நூல் அனைவரையும் சென்றடைய வேண்டும் என்ற நோக்கில் ஸ்ரீ பகவத் ஐயா அவர்களின் ஆலோசனைப்படி இந்நூலை அதன் அடக்கச் செலவைவிட குறைந்த விலையில், ரூபாய் **50/-** க்கு வழங்கி வருகிறோம்.

எனவே அனைவரும் வாங்கிப் பயன் பெறுவதோடு நண்பர்களுக்கும் உறவினர்களுக்கும் அன்பளிப்பாக வழங்கி அவர்களும் உயர்வு பெற உதவலாம்.

அன்புடன் **ஸ்ரீ பகவத் மிஷன்**

ஆகாமிய கர்மா நூலின் மூன்றாம் பதிப்பு

**கர்ம வினை– விடுபவது எவ்வாறு ?**

என்ற தலைப்பில் மேலும் 4 புதிய கட்டுரைகள் இணைக்கப்பட்டு ஆகஸ்டு மாதத்தில் வெளிவந்துள்ளது.

விலை ரூபாய் **150/-**

ஆகாமிய கர்மா நூலின் மூன்றாம் பதிப்பு கர்மவினை – விடுபடுவது எவ்வாறு? என்ற தலைப்பில் வெளியிட்டுள்ளோம்.

இதில் புதிய இணைப்பாக மேலும் நான்கு கட்டுரைகளை இணைத்துள்ளோம்.

1. தற்கொலை
2. இந்தப் பிறவியில் செய்த பாவங்களுக்கான தண்டனை அடுத்த பிறவியில் கிடைக்குமா?
3. அமானுஷ்யம்.
4. ஜாதக ஜோதிடம்.

அனைவரும் வாங்கிப் பயன் பெறுமாறு அன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

**ஸ்ரீ பகவத் மிஷன்**



# ஜென் கதை

## "அத்தோடு முடித்துக் கொள்"



ஓர் ஞானத் தேடல் உள்ள இளைஞன் இருந்தான். அவன் தேவையற்ற சிந்தனையால் பொழுதை வீணாக்கிக் கொண்டிருந்தான்.

முடிந்து போன நிகழ்வுகளை "இப்படி நடந்திருக்கக் கூடாது", "இப்படி நடந்திருக்க வேண்டும்" என்றும் இனி நடக்கப்போவதை "இப்படி நடந்தால் பரவாயில்லை" என்றும் எண்ணிக்கொண்டு பொழுதைக் கழித்தான்.

இப்படி சதா சிந்தித்துக் கொண்டே இருந்தான். அவனுக்கும் தெரிந்தது இது தேவையற்ற சிந்தனைதான் என்று. ஆனால் இதிலிருந்து விடுபடுவதற்கான வழி தெரியாமல் தவித்தான்.

சிந்தனைகளிலிருந்து விடுபடுவதற்காக தியானங்கள் பல செய்தான். ஆனால் அந்தத் தியானங்களுக்கு இடையூறாக பல சிந்தனைகள் வந்து கொண்டே இருந்தன. அவனால் அவனுடைய சிந்தனைகளைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவனது முயற்சிகள் அனைத்தும் தோல்வியிலேயே முடிந்தன.

இருப்பினும் அவனது முயற்சிகள் கூடின. எண்ணங்களும் அதிகரித்துக் கொண்டே சென்றன. இதனால் அவனது புற வேலைகளைச் செய்யமுடியாமல் மிகவும் தடுமாறினான்.

அவனுக்குப் பைத்தியமே பிடித்து விடும்போல் இருந்தது. இறுதியாக ஒரு ஜென் ஞானியை சந்தித்தான். தன் பிரச்சினையை எடுத்துக் கூறி எப்படியாவது சிந்தனையிலிருந்து தன்னை விடுவிக்குமாறு வேண்டினான்.

ஞானி இளைஞனுக்கு பல விளக்கங்கள் கொடுத்தார். ஆனால் அவனுக்கு நிறைவு ஏற்பட்டதாகத் தெரியவில்லை.

இறுதியாக ஞானி, அவனிடம் "சிந்தனையை நீயாக சிந்திக்கிறாயா? அதுவாக வருகிறதா?" என்று கேட்டார்.

இளைஞன், "இரண்டுமே நடக்கிறது. தானாகவும் சிந்தனை வந்து கொண்டே இருக்கிறது. அதைப் பற்றி நானும் சிந்தித்துக் கொண்டே இருக்கிறேன். எப்படி நிறுத்துவது என்றுதான் தெரியவில்லை" என்றான்.

ஞானி, "தாமாக வரும் சிந்தனைகள் வந்து விட்டு போகட்டும். அது உன் கட்டுப்பாட்டில் இல்லை. மேற்கொண்டு நீயாக சிந்திக்கும் சிந்தனையை முதலில் கைவிடு." என்றார்.

இளைஞன், "நானாக சிந்திக்கும் சிந்தனையை எப்படி நிறுத்துவது என்று எனக்குத் தெரியவில்லை. தெரியாமல் சிந்தித்து விடுகிறேன். அந்த சிந்தனையிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கிறேன் சுவாமி." என்றான் பரிதாபமாக.

ஞானி, "உனக்கே தெரியாமல் நீ சிந்தித்து விட்டாலும் தவறில்லை. அத்தோடு முடித்துக் கொள். இப்படி சிந்தித்து விட்டோமே என்று தவிக்காதே. இப்படி தவறு செய்து விட்டோமே என்ற தவிப்பே மீண்டும் சிந்தனையைத் தூண்டுகிறது" என்றார்.

இளைஞன், "அத்தோடு முடித்துக்கொள்வதற்கு நான் என்ன செய்ய வேண்டும்" என்று கேட்டான்.

ஞானி, "அத்தோடு முடித்துக்கொள்வது என்பது உன் முயற்சியைக் கை விடுவதுதான். எதையாவது செய்வதல்ல" என்றார்.

இளைஞன், "இதுதான் சுவாமி எனக்கும் புரியவில்லை. தானாகத் தோன்றும் சிந்தனைக்கு நான் ஒன்றும் செய்யத் தேவையில்லை. நானாக சிந்திக்கும் சிந்தனையிலிருந்து நான்தானே விடுபட வேண்டும். எப்படி விடுபடுவது? நானாக சிந்திக்கும் சிந்தனையை நிறுத்துவது எப்படி? இது புரியாமல் தவிக்கிறேன் சுவாமி. இதற்கு வழி கூறுங்கள்" என்று கேட்டான்.

ஞானி, இளைஞனை அமைதியாக உற்று நோக்கிவிட்டு பிறகு புன்முறுவலோடு அவனை அருகில் வந்து அமரச் சொன்னார். தன் சீடனிடம் ஓர் அகன்ற தாம்பாளத்தில் நீர் நிரப்பிக் கொண்டு வரச் சொன்னார். அகன்ற தாம்பாளத்தில் நீர் நிரப்பப்பட்டு வந்தது.

தாம்பாளத்தை கொண்டு வரும் போது ஏற்படும் அசைவால் நீரில் சலனம் ஏற்பட்டது.

ஞானி இளைஞனிடம், "நீரில் தோன்றும் இந்தச் சலனத்தை நிறுத்த என்ன செய்வாய்?" என்று கேட்டார்.

இளைஞன், "நாம் எதுவும் செய்யத் தேவையில்லை. அலை தாமாகவே மறைந்துவிடுமே சுவாமி" என்றான்.

சிறிது நேரத்தில் அலை நின்று, நீர் அசைவற்று நின்றது.

ஞானி இளைஞனிடம், "இப்போது இந்த நீரில் விரலால் உன் பெயரை எழுது" என்றார்.

இளைஞனும் தனது ஆட்காட்டி விரலால் அவனது பெயரை நீரில் எழுதினான்.

ஞானி, "நீயாக எழுதிய உனது பெயரை நீதானே அழிக்க வேண்டும். அதை அழித்து விடு" என்றார்.

இளைஞன், "சுவாமி நீரில் நானாக எழுதினாலும் அது தானாகவே மறைந்து விடும் அல்லவா?" என்றான்.

ஞானி, "இப்படித்தானப்பா உன் மனமும் செயல்படுகின்றது. சிந்தனை தானாக வந்தாலும் சரி, நீயாக சிந்தித்தாலும் சரி, அதனை **அத்தோடு முடித்துக் கொள்**. நிறுத்துவது உன் வேலை அல்ல. உன் முயற்சியை கைவிடுவதே சரி" என்றார்.

இளைஞன் நன்கு புரிந்து கொண்டான். தன் முயற்சிக்கு மனதில் வேலை இல்லை என்பதை நன்றாகப் புரிந்து கொண்டு மனதின் இயக்கத்தில் இருந்து விடுபட்டு விடுதலையோடு புறத்தில் திறம்பட செயல்பட்டான்.

# நிகழ்ச்சி நிழல்கள்



Registration Number of the Registered News Paper TNTAM/2014/57698 |
Postal Registration Number : TN/WR/SL(E)/22/2018-2020
Date of Publication : First Week of Every Month |
Posted at Salem HOP 636001. On 10th of every month.

Published by Shri. V.A.P. Sharavanan on behalf of the Sri Bagavath Mission,
31, Ramalingasamy Street, Ammapet, Salem-636 003. Tamilnadu. India.
Printed by Shri. R. Jayavel at Sree Jayavel Press, 08/11, Gandhi Maidanam, Ammapettai, Salem-636 003.
Editor : Shri. K.S. Jeevamani Cell : 97891 65555







